ா - து. ஒருசமயத்தைவிட்டு ஒருசமயத்தை அடைந்தோ
ம் துணிவுடைமையான் இங்ஙனமாதலின், எல்லாச்சமயத்
ன்மைகளும் அறிந்து அவற்றினுக்கெல்லாம் மேலாகிய ஒரு
ார்க்கத்தை அடைந்துள்ளவராதலின் ஞானிகளாயினோர்க்கு
ாசார குலாசார சமயாசாரங்களும் இல்லை; அன்னோர் சர்வ
ம்பமும் ஒருங்கே இறந்துடையாராதலின். எ - று.

இச்செய்யுளிரண்டிற்கும் பிரமாணம்: திருப்பனுவல். (131)
ருய ரியவென் றேதிரு மூன்று—ளைக்கையு நீங்கி யிந்தநன்
றியூ—டுற்றோர் பவமற் றோரிலை தெரிஇப்—பிறிதொரு நெறி
மேபதையெஞ் ஞான்று—முய்குவ திலையெனச் சைவமாதி
றுவித சமயத் தவருந் தனித்தனி—சுருதி புராணந் தொல்
ர் நல்லுரை—காட்டிப் புவிப்பா னுட்டிய வதனு—ளின்ற
ர் நிலைநீத் தொன்றையீண் டடைந்தோன் — றன்னெஞ்
டயே தான்முத ளின்ற-வந்நிலை பெரிதென் றறிந்துமஞ் சாது
றுகின்மண் ஞறி குறித்தொரு நெறியை—யடைகுவ னிரயத்
டயலை தன்றிச் — சென்னெறி பெரிதெனத் தேர்ந்துகொ
—ணந்நெறிக் குளபே றவனுமெய் துதலான்—மூவிரு சமய
வையு முணர்ந்திட்—டேறிய ஞானி சிலுகுவை யெனக்கொண்
ச்சம யச்சார் பனைத்தையு—மிச்சகத் திடைநீத் திடிலெவன்
ிய.'' எ - ம். தேவிகாலோத்தாம். (132) ''சமயா சாரசங்
விகற்பமு—மமையா தாங்குல வாசார மானது — மிமையா
ரும் விடாதவில் வாழ்க்கையு—மமையார் தோளாய் விடுதலா
மே.'' எ - ம். திருமந்திரம். (133) ''ஆறு சமயமுங் கண்டவர்
டில—ராறு சமயப் பொருளு மவனலன்—றேறுமின் றேறித்
ரிமின் றெளிந்தபின்—மாறுத லின்றி மனைபுக லாமே.''
ரியும், (134) ''சிவமல்ல தில்லை யறையோ சிவமாந்—தவமல்ல
லை தலைப்படு வோர்கட்—கவமல்ல தில்லை யறுசம யங்க—டவம்
ல நந்திதாள் சார்ந்துய்மி னீரே.'' எ - ம். திருவாய்மொழி.
5) ''யாவரு மெவையுந் தானு யவரவர் சமயந் தோறுந்—
ாய்விலன் புலனைந் திற்குஞ் சொலப்படா னுணர்வின் மூர்த்தி
விசே ருயிரி லுள்ள லாறுமோர் பற்றிலாத—பாவனை யதனைக்
ட லவனையுங் கூட லாமே.'' எ - ம். அஞ்ஞவதைப் பரணி.
6) ''தமர்பிற ாற்றார் சமயமு மற்றார் சகவியல் பற்றார் தமை
ாழி பற்று—ரமர்விட மற்று ாறமற மற்று ாறிவயர் வற்று
ாடி யாரோ.'' எ - ம். தத்துவராயர். (137) '' இலனென்
ரிச்சென் றிரக்கின் றிலனிங் கியாவரையுங் — குலனென்று
ாத்திர சாத்திரக் கத்துகள் கூறுகிலே—னலம்வந்து மற்றை

ர - து. மெய்ஞ்ஞானிகளாயினோர் முற்கூறிய சமயாதி பங்களோடு கூடி நிற்பினும், மனத்தின்கட் பற்றொழிந்து பர்: அஃது எங்ஙனமெனின், தாமரையும் சலமும் புளி ழம் ஓடும் முதலிய கூடியிருத்தல் போன்று. எ-று.

எவற்றொடு நின்றாலுமென்ற உம்மையால் நில்லாரென்பதே வு.

இ-ம். அமுதசாரம். (145) "அருந்தல் பொருந்த லவை ந்கு மேனும்—பெருந்தகையோ ருள்ளம் பிறிதே - திருந்து— தின்வே றேபதியு [1]மைந்தனுமம் மாதின்—றனத்தின்வே வே தான்." எ-ம். சிவதருமோத்தரம். (146) "மனத்துமய னனே மனைவிதனைத் தழுவியவன்—றனக்குமக டனைத்தழு [2] தங்கினனே வங்குமயன்—முனைப்பயனை யருந்திடினுந் ண்டார்கண் மோகமிலை—வினைப்பயனை யியந்தருந்தி மற் றோ வினைவிளைப்பார்." எ-ம். அருட்பிரகாசம். (147) "கடை க் காம நுகர்வா ளொருகன்னி காக்குஞ்சுற்றத்—தடையால் றி யுறலின்பி ராரத்தந் தாலெவற்றி—னிடைஞான வானந் பெற்றோ ரிருந்தும்பற் றின்றியெல்லா—முடையான் றிரு டிமே மனம்வைத் துறங்குவரே." அன்றியும், (148) "எங் ஙிருக் கவியினு மோரிடத் தின்மிருத்த—வோங்கழற் கீர மிலை ரகை போலெவ் வுபாதியையு—நீங்கினர்க் கன்றிநன் கின்றினு மொரு நீடறிஞர்க்—காங்கவை சூழினுந் தாழ்விலென் றோதுவ ர்தவரே." எ-ம். நீதிசாரம். (149) [3]"நீற்றிற் கழற்கொடியு தா மரையிலையுஞ்—சேற்றிற் கிடந்த சிறுபுழுவுஞ் - சாற்றுங் ர— மண்ணிற் றபனியமு மாஞானி கண்மனமு—மெண்ணிக் லைந்து மிலை." எ-ம். மற்றும் வருவனவற்றாற் காண்க. (௩௫)

இத்தன்மைப்பட்ட ஞானிகளது அனுபவ நிச்சயார்த்தம் ற்கூறுகின்றார்.

ஆறு நெறிக்கு மவிரோத போதமே
தேறுமெய்ஞ் ஞானியென் றுந்தீபற
சித்தாந்த மாகுமென் றுந்தீபற. (35)

1. மாதின்றனம் பதிக்கு மயக்கமும், மைந்தனுக்கவ்வின்மையும் லை. 2. மயல்தங்கினனே. 3. விபூதியிற் கிடக்கும் கொடிக்கழற் ாய்.

எ - து. ஒன்றுக்கொன்று விரோத நீங்காத அறுவகைச் சமயத்திற்கும் அவிரோதமாய் அவற்றிற்கெல்லாம் முடிவாயிருப்பதொரு ஞானம் யாது அதுவே தத்துவ ஞானிகளது துணிவு, அதுவே சித்தாந்தமென்று சொல்லப்படும். எ - று.

சித்தாந்த மென்றது முடிந்த பொருளெனக்கொள்க.

இ-ம், பெருந்திரட்டு. (150) "அறைந்தவெச் சமயங் கலையிலு மெடுத்துக் காட்டலா யருமறை முடிவிற்—சிறந்ததாற் பொருளாய்ச் 1 சிவனரி யயனுற் செப்பிய வருத்தமு மாகித்—துறந்தமற் றவிரோ தத்தையே துணிந்தோர் சொல்லிடும் பொருளுமா மொன்றை—நிறைந்ததைத் தலத்தின் மணியெனக் காட்டு நீதிசன் மார்க்கத்தி னியல்பே." அன்றியும், (151) "செய்தவே தவமாய்ச் செறிவது விடுதின்றியே சகலசங் கற்பப்—பொய்யதா மொழுக்கப் புலை மைய தறவே போதமா மெய்ம்மொழுக்கு ததுவாய்ம்—மைகயிலா மலை மென்னவே வீட்டைக் காட்டவும் வல்லதே ததுவே—மெய்யதாம் வேத 2 வேதனை மல்லா தவத்தியல் வேதனை மறிவே." எ-ம், திருவள்ளுவர். (152) "எப்பொருள் எத்தன்மைத் தாயினு மப்பொருள்—மெய்ப்பொருள் காண்ப தறிவு." எ-ம், அவிரோத போதம். (153) "எடுத்தவெம் மதமெந் நூல்கள் யாவையுந் தமதா யாக்கு—மடுத்ததற் பொருளை கொண்டு வளம்பட மகிழ்வ தல்லாற்—படித்தொரு பொருளைப் பற்றிப் பாங்கிலு வதிலோ தாங்கிப் —பிடித்தது பிடித்துக் காதும் பேதைமை பெரியோர்க் கின்றே." எ-ம், அருட்பிரகாசம். (154) "ஓரோர் சமயத் தாயிராய்ச் சிலபல வுண்டுசென்று—மாராயின் முத்தியொன் றேயெனி னெங்கு மதைவிரும்பித்—தேராம லெம்மத மிம்மத மென்றெழுன் றிற் சிக்கிவிதுப்—பார்மீ தழல்வதன் றீர்த்தனின் தேர்செயும் பண்பிதன்றே." எ-ம், மோகவதைப்பரணி. (155) "கூறுபல பேருடைய வாறுபல வும்போய்க் கோத்தபா லைவகதொரு நீத்த மெனு மாபோல்—வேறுபல வானசம யங்கண்முடி விற்போய் வேறற வடைந்தது வேதநெறி வீடே." எ-ம், அமுதசாரம். (156) "இந்நெறி யிந்நெறியென் றெம்மார்க்க முரைப்பவர்க்—கந்நெறியெல்லா மறிந்தவறி—வெந்நெறியா—லெய்தலா மந்நெறி யென் றறைந்த வேதவேத—மெய்தவா வீட்டு நெறி." அன்றியும், (157) "எய்த வெளிதா யிறையருளி னில்லையே—வெய்த வரிதா

1. சகாநிஷ்டை, பகவந்நிஷ்டை, பிரமநிஷ்டை கூறிய பொருளுமாம்.
2. வேதனம்—ஞானம்.

ரவர்க்கு-மெய்தெளிந்தா-லெம்மார்க்கத் தோடு மிகலற் றிருக்கு
ந—சன்மார்க்க மாகுநெறி தான்." எ - ம். மற்றும் வருவன
ஒற் காண்க. (௩௫)

வேதமுடிவும் சமயங்களினது துணிவும் இதுவென்று மேற்
றுகின்றார்.

சுருதிகள் சொல்பல் சமயத் துணிவுமப்
பரசிவ பந்தமென் றுந்தீபற
பகர்நாமம் வேறுவே றுந்தீபற. (36)

எ - து. வேதங்களிலே சொல்லப்பட்ட பலவித சமயங்களி
ன துணிவும் யாதென்னில் பரசிவ பந்தமென்று மூவகைப்
பொருளையும் உணர்த்துதல், சமயிகள் அவற்றிற்குத் தத்தங்
கோட்பாட்டால் கூறுகிற்கும் பரிபாஷை நாமங்கள் வெவ்வேறு.
று. (௩௬)

இங்ஙனம் கூறிய முப்பொருளையும் இன்றென்பாரும் உளரா
ன், அதுபற்றி முதற்கட் பரமுண்டென்று மேற் கூறுகின்றார்.

நிருமல பூரண நித்தாதி நீங்கா
வொருபரந் தானுள துந்தீபற
உலகங்க டோற்றலா னுந்தீபற. (37)

எ - து. நிருமலம் பூரணம் நித்தம் அதிசூக்குமம் சச்சிதா
னந்தம் என்று கூறும் இவை முதலிய குணங்களைச் சொருபவிலக்
கணமாகவுடைய ஒரு பரம் பொருளுண்டு; அதினிடத்து நின்றும்
பிரசாப் பிரபஞ்சங்கள் உற்பவித்தலின். எ - று.

இது அநீசுரவாதிகளை மறுத்தது. அது எங்ஙனமென்னில்,
நவன் ஒருத்தி ஒன்று என்னும் பிரபஞ்சமானது ஒரு கர்த்தாவை
உடையது. தோன்றிநின்று அழியுங்காரியமாதலின்; எங்ஙனம்
குடம்போல், அஃதெதாக்கும்; மாதாபிதாக்கள் காரணமெனின்;
அன்னோர் புத்திரோற்பத்தி வேண்டிய காலத்து உண்டாகாமையி
னாலும், வேண்டாத காலத்து உண்டாகுதலாலும், ஆணிச்சிக்கப்
பெண்ணுகுதலாலும், பெண்ணிச்சிக்க ஆணுகுதலாலும், இருவகை
யிச்சையும் அன்றியிலே அலியாயும் குருபியாயும் தோன்றுதலினு

லும், உற்பத்தியானதும் ஆகாததும் உடனே உணரப்படாமையானும், ஒருவர் பண்ணக்காணுதிருக்கவும் மாதாவுதரத்தில் மாதந்தோறும் உருவாய் வளர்ந்து கருப்பாசயமுதலிய துன்பங்களுக்கு இறவாது இங்ஙனம் தோன்றுதலாலும், கடோற்பத்திக்குத் தண்டசக்கராதிகள்போல் மாதாபிதாக்கள் சுதந்தரமின்மையாலும் அஃதன்றியும் [1] உற்பிச்சத்தோற்றங்கள் மாதாபிதாக்கள் சையோகம் இன்றியே வித்துக்காரணமாக உண்டாகையினாலும், அன்னோர் காரணமென்பது கூடாது.

அஃதொக்கும்; சுக்கிலம் காரணமாய்த் தேகங்கள் உண்டாதலின் உத்தரோத்தரசரீரங்களுக்குப் பூர்வசரீரபீசம் காரணமெனின்; பாம்பின்வாயிலே கல்லும் கல்லின்வாயிலே தேரையும் நராதிதேகங்களிலே தோன்றிய புழு முதலியவைகளும் மரங்களில் தோன்றும் கிருமி கீடம் புல்லுருவி முதலானவைகளும் காளான் முதலியவையும் நிலத்திற் சலத்திற்றோன்றும் கிருமியாதி வடிவங்களும் ஆகிய சுவேதசத் தோற்றங்களுக்குப் பூர்வசரீரபீசம் காரணம் அல்லாமையால் வித்தே காரணமென்பது கூடாது. சுவேதசத்தோற்றங்களும் பூ பூதாதி பிரபஞ்சத்தினின்றும் உற்பவிக்கையால் அவையே சரீரோற்பத்திக்குக் காரணமெனின்; சுவேதசோற்பத்திக்குச் சாரசாரவுருவமிரண்டும் காரணமாகையினாலும், மற்றுமுள்ள மூவகை யோனிகட்கும் அப்பூபூதாதி காரணமென்கை காணப்படாமையினாலும், அது கூடாது.

அங்ஙனமன்று, ஒருதீபத்தில் ஒருதீபமாகப் பாரம்பரியத்தில் அநேகதீபம் உண்டாயினும் அத்தீபத்தினது தாபசத்தி அக்கினியின்கட் காணப்படுகையால் அதற்குக் காரணம் அக்கினியேயானாற்போலத் தேக குணங்கள் பூ பூதாதி சாத்தில் கிருமி புழு முதலியவும், அசாத்தில் காளான் முதலியவும், காணப்படுகையால் அவைகட்குப் பிருதிவியாதி சாதுர்ப்பூதமே காரணமெனின்; அப்படித் தோன்றுவித்ததென்கை ஒரு காலத்தும் ஓரிடத்தும் ஒருவராலும் கண்டோமென்கை கேட்கப்படாமையினாலும், அது கூடாது. ஆயினும் அங்ஙனமன்று; விளக்கு உண்டாவதற்கு முன்னே அக்கினி விளக்கைத் தோன்றுவிக்க வேண்டுமேயல்லாமல் விளக்கு உண்டானதின் பின்பு அதுவும் இருக்க வேறொரு விளக்கை அக்கினி தோன்றுவிக்க வேண்டுவதில்லை அதுபோல் தேகாதிகள் இல்லாத காலத்திலே சாதுர்ப்பூதம் தேகாதிகளைத் தோன்றுவிக்குமல்லாமல் இப்பொழுது தோன்றுவி யாதெனில்,

1. உத்பித், ஜம்-பூமியைப்பிளந்து மேலெழும்புங் கொடி செடியாதி.

)ப்பொழுதும் பிருதிவியாதிகளில் சுவேதசவுருவம் தோன்றுகை
ளுலும், அஃதன்றிக் காஷ்டத்தில் அக்கினியை, அக்கினியில்
ளக்கை ஒருவன் முன்பு தோன்றுவித்துப் பின்பு ஒரு விளக்கில்
ரு விளக்கைத் தோன்றுவிக்குதலன்றிக் காஷ்டத்திற்கும் அக்கி
ரிக்கும் விளக்கிற்கும் தானே வேறொன்றைத் தோன்றுவித்தல்
டாமைபோல், சாாசரப் பிரபஞ்சங்கள் சடமாதலின் அவைகளை
ாயையினின்றும் தோன்றுவித்தவன் ஒரு கர்த்தா உண்டெனக்
காள்க.

இ-ம். சிவஞானசித்தியார். (158) "ஒருவனே டொருத்தி
பான்றொன் றுளைத்திடு முலகமெல்லாம் — வருமுறை வந்து
ன்று போவது மாதலாலே—தருபவ னொருவன் வேண்டுந் தான்
தனீறு மாகி—மருவிடு மநாதி முத்த சித்துரு மன்னி நின்றே."
ம்,மற்றும் வருவனவற்றுற் காண்க. (கூஎ)

சீவர்கள் உண்டென்று மேற்கூறுகின்றார்.

பல்சித்தி முத்தி பாரு லடைதலாற்
றெல்சீ வருமுள ருந்தீபற
சுதந்திர ரிணரென் றுந்தீபற. (38)

எ-று. அநேகசித்திகளையும் முத்தியையும் அப்பரம்பொரு
ளது அருளினுல் இவ்விடத்து அடைவார் உளராகலின், அநாதி
ய் அநேக உயிர்கள் உளர். அவ்வுயிர்களும் சுதந்திரமிலர். எ-று.

பல்சித்தியென்றதனுல் மாயாவாதியை மறுத்தது. அஃது
ரமணமெனில், பரகாயப்பிரவேசமும் சித்தியாதலினெனக்
காள்க. முத்தியென்றது சீவர்க்கே: சீவர்க்கல்லது பரத்திற்குப்
தம் கூறுதல் ஒருவர்க்கும் ஒவ்வாமையினெனக் கொள்க. உயிர்
ள அநாதியென்றது பரத்தினது சிருட்டியாதி விளையாடல்
ாதியாதலினெனக் கொள்க. அநேகமென்றது ஏகாத்தும
இக்கும் விவகாரத்தில் இவ்வண்ணமே கூறப்படுதலினெனக்
ாள்க. சுதந்திரீணரென்றது பாதந்திர சுதந்திரரென்றதெ
க்கொள்க. அஃதன்று பாதந்திரரேயெனில், தாமே வினை
யக்குதல் கூடாது. அதுவும் பரமே செய்விக்குமெனில், பரத்
ற்கு அவிகாரியென்றும், பொருளுடையோனென்றும், வேதா
ன் கூறுதல் அப்பிரமாணமாம். அன்று - சுதந்திரரேயெனில்,

சீவ பரமத் துவிதமென் றிண்சொலா
லேவா தனைவரு முந்தீபற
வொன்றிரண் டென்பரா லுந்தீபற. (42)

எ - து. சீவபரங்களை ஏகமுமென்னுமல், துவிதமுமென்னுமல், அத்துவிதமென்று அவாதிதமாகிய சுருதி கூறுகையால், இரண்டாகில் முத்தியில் ஒன்ருதல் கூடாது, கூடுமெனில், ஒன்று கெட்டு ஒன்ருதல் வேண்டும்; கெடும்பொழுது முத்தியின்மையால் இரண்டென்பதே கூடாது; பொன்னும் பணியும்போல் இரண்டாகத் தோன்றுதலின் ஏகமென்னுது அத்துவித மென்றதெனக் கொண்டு அப்பதத்திற்குத் தாற்பரியம் ஏகமே யென்பாரும், அங்ஙனமன்று ஒன்ருகில் வஸ்துவுக்குப் பந்தமோக்ஷம் சொல்ல வேண்டும் அஃது இன்மையால் ஒன்றென்பதே கூடாது உடலுயிராதியபோல் பேதம் தோன்ருமையின் துவிதமென்னுது அத்துவிதமெனுநின்றது. அதற்குத் தாற்பரியம் துவிதக்கலப்பே யென்பாரும், ஆகி எல்லாச்சமயிகளும் கூறுவார். எ - று.

அனைவரு மென்றமையால் எல்லாச்சமயிகளும் பேதம் அபேதம் என்பனவற்றையே அனுசரித்து நிற்கையால், அவ்விரண்டையுமே கூறினுரெனக்கொள்க. பேதாபேதமென்பாரும் உளர்: அங்ஙனம் ஒருபொருள் இருப்பது விருத்தமாதலினுலும், அதுவும் துணிவின்கண் முற்கூறிய இரண்டினுள் ஒருபக்ஷத்து அடங்குமாதலின் அதனை ஒருபக்ஷமாகத் தொகுத்துக் கூறினுரில்லை யெனக் கொள்க. (சஉ)

இங்ஙனம் கூறியவற்றுள் ஏகவாதம் சாதித்தல் கூடாதென்று மேற்கூறுகின்ருர்.

ஒன்றெனின் வீடின்றுண் டேனும் லீலையாற்
பின்றையுஞ் சாருமென் றுந்தீபற
பெத்த மநித்தம்வீ டுந்தீபற. (43)

எ - து. சீவபரங்கள் ஏகமென்னும் பக்ஷத்தில் வஸ்துவுக்குப் பந்தம் இன்மையால் முத்தியே இல்லை. பந்தம் உண்டாயினும், முத்தி இல்லை. பரத்தினது லீலையால் பந்தமோட்சமுண்டாயினும் பின்னும் லீலையால் பிறப்பின்கண் சாரா

நிற்பர். சாரும்பொழுது முன்பு முத்தியடைந்தது அவமாகப் பந்தம் நித்தியமாய் விடுமாதலின் ஒன்றென்பது கூடாது. எ-று.

அஃது எங்ஙனமெனின், சீவபரங்கள் ஏகமேயென்னின் இங்ஙனம் துவிதபாவனை வருவானேன். பந்தத்தாலெனின், வஸ்து நின்மலனுகையால் பந்தம் உண்டென்பதே கூடாது. உண்டென்னில், அப்பந்தம் வஸ்துவுக்குப் பின்னமோ அபின்னமோ. பின்னமென்னில் வஸ்துவைவிடப் பந்தம் வேறே ஒரு முதலாக உண்டாதலினுல், அவ்வஸ்துவுக்கு ஏகமென்பதே கூடாது; அதுவுமன்றிப் பந்தமுடைய பொருட்குச் சுதந்திரமின்மையால் அப்பந்தத்தை நீக்குவான் நின்மலனுக ஒரு கர்த்தாவும் மேலே உண்டாகவேண்டும்; அங்ஙனம் கர்த்தா இன்மையால் அப்பந்தம் நீங்குதலே கூடாது. அங்ஙனமன்று அப்பந்தம் வஸ்துவுக்கு அபின்னமேயெனின், அபின்னம் தன்னியல்பாகையால் ஒருகாலும் பந்தம் நீங்காது. இங்ஙனமாதலால் வஸ்துவுக்குப் பந்தம் உண்டாயின் முத்தியும் இல்லை. அதற்குப் பந்தமே இல்லையென்முல், அதற்கு முன்பே முத்தியும் இல்லை. அஃது ஒக்கும்; அந்த வஸ்துவுக்குச் சுபாவத்திலே பந்தமுத்தி இல்லாவிட்டாலும் அதனது சுதந்திர லீலையாலே பந்தமுத்திகள் உண்டென்னில், அங்ஙனமாயின் சீவர்கள் வீடுகூடினும் பரத்தினது லீலையாற் பின்னும் பிறப்பின்கண் சாரா நிற்பர். சாரும்பொழுது முன்பு முத்தி அடைந்ததும் அவமாகப் பந்தம் நித்தியமாதலால், சீவபரங்கள் ஏகமென்று கூறுதல் கூடாது எனக்கொள்க. (௪௩)

ஏகவாதத்துள் பந்தத்தைப் பிராந்தியென்பாரைப் பற்றி மேற் கூறுகின்றார்.

ஆருயிர்பந்தத் தானது மித்தையே
லேக வமலன்க ளுந்தீபற
எவ்வா றுளதாமென் றுந்தீபற. (44)

எ - து. பிரதிபிம்பம் அவிச்சின்னம் இவைபோலும் சீவர்கள் மாயையில் உண்டாகா நிற்பர். அம்மாயையும் பிராந்தியென்னில், அப்பிராந்தி ஏகத்துவ நிருமலத்துவமுள்ள பிரமத்திற்கு உண்டாகுதல் கூடாமையால், ஆத்மாக்களது அஞ்ஞானதி பந்தம் மித்தையன்று. எ - று.

அது எங்ஙனமெனின், மித்தையாவது விஷயாதி தோஷத்தால் தோன்றும் சுத்திகா ரசதாதி பிராந்தி ஞானம்: அப்பிராந்தி ஆத்மாவுக்கேயெனின், ஆத்மாவுங் கடதர்ப்பணாதிகளிலே தோன்றும் அவிச்சின்னம் பிரதிபிம்பம் இவைபோலும் மாயையின்கணின்று தோன்றவேண்டும். அதனால் மாயையினால் சீவரும் சீவர்களால் மாயையும் என்று அன்னியோன்னியாசிரயதோஷம் வரும். அதனால் ஆன்மாவுக்குத் தோன்றியதென்பது கூடாது: ஆனால் பிரமத்துக்கே தோன்றிற்றென்னில், அதுவும் கூடாது: பிரமம் ஏகமாதலால் விஷயதோஷமும், நிருமலமாதலால் கரணகர்த்திருதோஷமும், தோன்றுதலின்மையால், பிராந்திஞானமே உற்பவித்தல் இல்லை, அஃது இன்மையாகவே, சீவர்களும் இல்லையாக, அதற்கு முன்பே பந்தம் சொல்லுகிறதும் இல்லையாய் விடும். அதனாலே பந்தம் மித்தை அன்றென்றதெனக் கொள்க. (சச)

இனித் துவிதவாதமும் சாதித்தல் கூடாதென்று மேற்கூறுகின்றார்.

ஓரிரண் டேலிறைக் குற்ற கருணையார்
சேர்வரன் றேயின்று முந்தீபற
சேர்தலென் சீவர்வீ டுந்தீபற. (45)

எ - து. சீவபரங்கள் துவிதமாயிருக்குமெனில், பரத்தினது கருணையால் அநாதியே எல்லாவுயிர்களும் முத்தியே அடையாநிற்கும். இப்பொழுது சிருட்டியாதி தொழிற்பண்ணுதற்கு இடமே இல்லை. அவை உண்டாயிருத்தலின், சீவர்களைப் பரத்திற்குப் பேதமென்று கூறுதலும் கூடாது. எ - று.

அஃது எங்ஙனமெனின், வஸ்து பின்னமாய் ஓராத்மாவிருக்கில், அவனும் சித்தாதலால் அவனுக்குப் பந்தம் வருவானேன்? அதுவும் செம்பிலே களிம்புபோல் சகசம்: அப்பந்தமும் ஆத்மாவே நீக்கிக்கொள்ளில் அநாதியே நீங்கிப்போம், அஃதின்மையால், வஸ்துவே நீக்குகின்றானென்னில், வஸ்து ஆனந்த சொரூப சர்வதிருப்தனாதலால், அவன் தனக்கு ஒரு பயனும் வேண்டான்: அவன் ஆத்மாக்களால் அடையும் பயன் யாது. அங்ஙனம் பயனைக்குறித்ததன்று; வஸ்து ஒப்பற்ற பேரருளுடையோனாதலின், ஆத்மாக்களிடத்து வைத்த கருணையே யெனில், அங்ஙனமாயின் உடனே பந்தம் நீக்கவேண்டும். நீக்குதல் கூடாதென்னில், அசத்

தல் வரும். மெள்ள மெள்ள நீங்குவனெனில், பொருளுடை
னென்பது கூடாது. இதுவன்றியும், ஆத்மாக்கள் நித்திய
லாலும், முத்தியையடைந்தோர்கள் பிறப்பின்கண் திரும்பா
பாலும், அநாதியே பஞ்சகிருத்தியம் ஒழியவேண்டும்.

அங்ஙனமன்று, ஆத்மாக்கள் மிகுதியினாலும் ஒவ்வொருவர்க்கு
வினையொப்பும் மலபரிபாகமும் வருதல் கிழியீடாதலினாலும்,
சகிருத்தியம் ஒழியாதென்னில், எண்ணிறந்த ஆத்மாக்களும்
ட்டிக்கு ஒருவர் முத்தியடையினும் எண்ணிறந்த சிருட்டி
எண்ணிறந்த ஆத்மாக்கள் முத்தி அடைதலால் என்று
பம் ஒரு காலையில் பஞ்சகிருத்தியம் ஒழியா நிற்கும். அப்படி
காலத்தில் பஞ்சகிருத்தியம் ஒழியின் தோஷம் ஏதெனில்,
யும் பசுக்களும் நித்தியமாதலால் முன்னிறந்த காலத்திற்கு
வின்மையால் அநாதியே பஞ்சகிருத்தியம் ஒழியவேண்
ஒழியாமையால், இனியொருகாலத்தில் ஒழியுமென்பதற்குப்
காரணமேயில்லை. அல்லது ஒழியுமென்னில், பஞ்சகிருத்திய
ஆரம்பத்திற்கு அவதி கூறவேண்டும். அது கூடாமையால்
சகிருத்தியம் ஒழியுமென்பது கூடாது.

அங்ஙனமன்று ஆத்மாக்கள் இடைவிடாது முத்தியடையி
ம், உலவாக்கிழிபோல் தொலைவற்றிருக்குமெனின், அக்கிழி
ப்விகத்தினாலே பின்னும் இடையறாமல் வர்த்தித்தல்போலே
க்களைப் பதிமுத்தியடைவித்தல் செய்ய மேலுமேலும் அதற்கு
டபதியாகிய ஒருபதி வர்த்திப்பியாநிற்கிறதென்றாலும், அது
லை. இப்பதியே தற்காருணியத்தினால் உண்டுபண்ணிக்
ான்ளுகிறதென்றாலும், அன்றி ஆத்மாக்களே சகசமாய் உண்
கா நிற்கிறதென்றாலும், உற்பத்தியே காட்டாநிற்றலால், ஆத்
க்களநித்தியமென்பது வரத்திரியும். இதுவன்றியும், ஆத்மாத்க
ர எண்ணிறந்த தென்னுமுறை ஆத்மபோதத்துக்கு எட்டா
ன்பதொழிந்து சிவத்திற்கும் அங்ஙனம் கூறுதல் கூடாது.
தற்கு அங்ஙனந் தானேயெனின், ஓரோராத்மா பண்ணியிருக்
ள சஞ்சிதகர்மங்களுக்கு அளவில்லையாதலின், எண்ணிறந்த
த்மாக்கள் செய்த எண்ணிறந்த கர்மங்களையும் அதற்குக் கோடிக்
ம் பலன்களையும் சர்வமுத்தியும் ஏககாலத்தில் அளவிடாநிற்கும்
ப்பதிக்கு ஆத்மாக்களது தொகை தெரியாதென்னில், யானைக்கண்
வனுக்குத் தொகை காணப்படாதென்பது கூடாது: வினையும்
ளவறுக்கப்படாது. அவரவர்க்கும் அவரவர் கர்மங்களுக்கும்
டையாளம் கண்டே கூட்டுவனென்னில், சர்வஞ்ஞனென்பது

கூடாது. எண்ணிறந்த பொருளை எண்ணிறந்ததென்றறிகிற
சர்வஞ்ஞத்துவமென்னில், எண்ணிறந்ததென்பது ஆத்மலக்ஷ
மன்று. பலமரம் கூடினது ஒருசோலை என்பதுபோல எண்
றந்ததென்பது ஆத்மசமுதாயத்துக்கு உண்டானது: ஆத்மாவு
லக்ஷணமானது சத்துசித்து நித்திய விபுவென்னும் இலக்கணங்
இவை ஓராத்மாவிடத்தும் பல ஆத்மாவிடத்தும் இருந்
போலே எண்ணிறந்ததென்னு மிலக்கணமும் அங்ஙனம் இரு
வேண்டும்; அது கூடாமையால், அசங்கியம் ஆத்துமலக்ஷணமெ
பது கூடாது.

இதுவன்றியும், மூவகையுயிர்களுக்கும் சிருட்டிகாலத்
பதியினால் தனுகரணங்கள் கொடுத்து முடியுமோ முடியாதோ
முடியுமென்னில் அளவில்லையென்பதே கூடாது. இதுவல
யும், வரத்தும் இல்லாமல் செலவும் உண்டாயிருக்கிறபொரு
சிலகாலம் அளவுபடாவிட்டாலும் சிலகாலத்தில் அளவுபட்டுச்
காலத்தில் ஒழியுமென்பதே யதார்த்தமாதலால் செலவு உண்
ஒழியாதபொருட்கு வரத்துண்டென்பது வரத்திரியும். ஆத்
கள் நித்தியமாதலால் பதியாலளவுபடுமென்னில், அளவு
தற்கு முடிவில்லையென்பது கூடாது. ஆதலால் எவ்விதமும்
சகிருத்தியத்துக்கு ஒழிவுதோன்றுகிற்கும்: அங்ஙனம் அன்று
மாக்களெல்லாம் நித்திய சமுசாரியும் அநித்தியசமுசாரியும
இருப்பார்கள்: அநித்திய சமுசாரிகளெல்லாம் முத்தியடை
போனாலும் நித்திய சமுசாரிகள் இருக்கையால் சிருட்டிய
தொழில் ஒழியாதென்னில், அநாதியே அநித்திய சமுசாரிகளெ
லாம் முத்தியடைந்துபோய் நித்தியசமுசாரிகண் மாத்திரம் இ
கவேண்டுமாதலால், இப்பொழுது முத்தி அடைவார் இல்லை
மென்பது வாத்திரியும்: உண்டாயிருத்தலின், அநித்தியசமு
களை இல்லையென்பது எங்ஙனம்? ஆதலால், சீவ பரங்களைக்
தமென்று கூறுதல் கூடாதெனக்கொள்க.

துவிதவாதத்துள் பந்தத்தை நித்தியமென்பாரைப் ப
மேற்கூறுகின்றார்.

உதியா விருளை யுதித்தவை கூட்டிப்
பதிபந்தஞ் செய்யுமே லுந்தீபற
பதிசத்தி யென்னுமென் றுந்தீபற.

எ - து. ஆத்மபந்தமாயிருந்துள்ள அஜன்னியமாகிய ஆ
வமலத்தை ஜன்னியமாகிய மாயாகாரியங்களால் முதற் பிர

தம் செய்வித்துப் பின்பு தனது ஞானசத்தியால் பிரதிபந்தம் செய்யாநிற்கும் சிவமென்னில், அப்பொழுது அச்சிவத்திற்கு அசத்தனாகுதல் வாராநிற்கும்: அதனால், பந்தம் நித்தியமென்பது கூடாது. எ - று.

அஃது எங்ஙனமெனின்; யாது நித்தியம் அஃது அஜன்னியம். அங்ஙனம் அஜன்னியமாகிய ஓராணவமலம் கண்ணுக்கு இருளும் செம்பிற் களிம்பும்போல் அநாதியே ஆத்மஞான சத்தியைப் பிறிவறக் கலந்து மறைத்து நிற்குமாயின், பிரகாசத்தோடு கூடிய கண்ணுக்கு இருளும் ரசகுளிகையுடன் கூடிய செம்பிற்குக் களிம்பும் இன்மைபோலும்: நித்தியபூரண சுத்தமாயிருந்துள்ள சிவத்தோடு கூடிநின்றுள்ள ஆத்மாவை அஞ்ஞானமாவரித்தல் கூடாது. கூடுமென்னில், சிவம் அஞ்ஞான விரோதியென்பது கூடாது. அது நிற்க, ஆணவமலம் நித்தியமாகின் முத்தி எங்ஙனம் கூடும். அது பிரதிபந்தப்படுதலின் முத்தி கூடுமென்னில் அங்ஙனம் பிரதிபந்திப்பது யாது. மாயாகாரியங்களினால் பிரதிபந்தமென்னில் அநாதியே அவை கூடியிருக்கவும் முத்தியெய்தாமையின் அது கூடாது. அங்ஙனம் அன்று முத்திகாலத்தில் ஜன்னியமாகிய சுதவதிட்ட சையோக மாயாகாரியங்களினால் பிரதிபந்தமென்னில், அவையிரண்டும் ஜன்னியமாதலால் யாது ஜன்னியம் அஃது அநித்தியமென்று அவைகளுக்கு நஷ்டமெய்தாநிற்கும். அப்பொழுது முத்தியினும் அஞ்ஞானம் ஆவரியாநிற்கும். அங்ஙனம் அன்று அவையிரண்டினாலும் சிவஞானம் ஆவரியாத அஞ்ஞானத்திற்குப் பிரதிபந்தம் வரும், அப்பொழுது சிவஞானம் ஆத்மாவுக்கு விஷயமாம். அச்சிவஞானம் நித்தியமாகையால், அஞ்ஞானத்திற்கு என்றும் பிரதிபந்தமென்னில் சிவஞானம் அஞ்ஞானத்திற்கு விரோதியேயாமாகில்; அநாதியே முத்தி வரும். அஃது இன்மையால், இங்ஙனம் பிரதிபந்தப்படுத்து மென்பது கூடாது.

அங்ஙனம் அன்று; அநாதியினாலே சிவஞானம் ஆத்மாவுக்கு விஷயமாகாமையின் முத்திகாலத்து ஆகுதலின், இங்ஙனம் பிரதிபந்தப் படுத்துதல் கூடுமாயின், சிவஞானமும் மாயாவலியின் ஆத்மாவிற்கு விஷயமாகுதலின் சூரியப்பிரகாசத்தில் கண்ணிற்கு விஷயமான கடம் அப்பிரபை நீக்கத்து இருளைப் பிரதிபந்தம் செய்து பின்னும் விஷயமாகுதல் கூடாமையின், மாயா நீக்கத்தில் ஆணவமலத்தை அது பிரதிபந்தம் செய்குதல் கூடாது. அதனாலும், மாயாகர்மங்கள் இல்லாவிடில் ஆத்மாவின் ஆணவமலத்தை

நீக்குதல் கூடாது என்பதினாலும், சர்வசத்தியுமுடைய வஸ்துவுக்கு அசத்தனாகுதல் வாராதிற்கும். அதனால் பந்தம் நித்தியமென்பது கூடாது என்றதெனக் கொள்க. (௬௬)

இங்ஙனம் திரிபதார்த்த நிச்சயம் பண்ணுவதொழிந்து இத்தசைக்கண் மனமுதலாகிய மாயாகாரியங்களைக்கொண்டு துவிதாத்துவித நிண்ணயம் சாதித்தல் கூடாதென்று மேல்வரும் செய்யுள் இரண்டானுங் கூறுகின்றார்.

பந்தாந்த மூன்றும் பகர்வதல் லாவிவை
சிந்தித் துரைக்கொணா துந்தீபற
சித்தமும் பெத்தமா னுந்தீபற. (47)

எ - து. பரசீவ பந்தங்களென்று சொல்லப்பட்ட திரிபதார்த்தங்களையும் உண்டென்பதேது இந்நூலினது துணிவாயினும் அவற்றினை ஒன்றுக்கொன்று பேதமென்றும், அபேதமென்றும், பேதாபேதமென்றும், சமயிகள் கூறுகிற்பர். அவ்வுண்மை நிச்சயித்துக் கூறுதல் ஒருவருக்கும் முடியாது. நினைத்தற்குக் கருவியாகிய சித்தமும் மாயாகாரியமாய் இத்தசைக்கண் சீவனுக்குப் பந்தமாய் விடுதலின். எ - று.

அஃது எங்ஙனமெனின், இத்தசையின்கண் நிச்சயிப்பதெல்லாம் மனத்தைக் கொண்டாதலானும், பரசீவ பந்தங்களினது உண்மை வாக்கு மனத்துக்கு எட்டாதென்று சுருதியாதிகள் கூறுகையானு மெனக்கொள்க. (௬௭)

மின்மினிச் சோதியால் வீடிருட் கூடுவான்
றன்மைபோன் மாயைகொ டுந்தீபற
தத்துவந் தேர்வதென் னுந்தீபற. (48)

எ - து. மிகுந்த அந்த காரத்தின்கண் வழிகாணாது மிகவும் வருந்தியவொருவன் மின்மினி விளக்கத்தைக் கருவியாகக் கொண்டு தனது இல்லிடத்தைக் கூடுவான் நினைத்துச் செல்வது போலும், போந்தகாரமாகிய அஞ்ஞானவிருளில் மறைந்துள்ள சீவன் கிஞ்சித்தாகிய மனவிளக்கத்தைக்கொண்டு தனதுண்மையை விசாரிக்கத் துணிந்தது. எ - று.

இச்செய்யுளிரண்டிற்கும் பிரமாணம்: திருக்கடைக்காப்பு. (159) "ஆட்பா லவர்க்கருளும் வண்ணமு மாதிமாண்பும்—கேட்பான் புகிலளவில்லை கிளக்கவேண்டா—கோட்பா லனவும் வினை

யுங் குறுகாமையெந்தை—தாட்பால் வணங்கித் தலைநின்றிவை கேட்கதக்கார்." அன்றியும், (160) "ஏதுக்க ளாலு மெடுத்த மொழி யாலுமிக்குச்—சோதிக்க வேண்டா சுடர்விட்டுளனெங் கள்சோதி—மாதுக்க நீங்க லுறுவீர்மனம் பற்றிவாழ்மின்—சாதுக் கண் மிக்கிறை யேவந்து சார்மின்களே." எ-ம். திருமந்திரம் (161) "உரையற்ற தொன்மை யுரைசெய்யு மூமர்காள்—கரையற்ற தொன்மைக் கரைகாண லாகுமோ—திரையற்ற நீர்போற் சிந்தை தெளிவார்க்குப்—புரையற்று நின்றான் புரிசடை யோனே." எ-ம். திருவாசகம். (162) "இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத் தெழுகின்ற ஞாயிறே போன்று—நின்றநின் றன்மை நினைப்பற நினைந்தே னீயலாற் பிறிதுமற் றின்மை—சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந் திருப்பெருந் துறையுறை சிவனே—யொன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை யாருனை யறிய கிற் பாரே." அன்றியும், (163) "சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க—சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க—நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க." எ-ம். தத்துவராயர். (164) "ஆகியு மழிந்தும் போகு முற்பவத்—துன்பந் துடைத்திங் கின்பங் கொடுக்கத்—திருவுருப் புனைந்த குரவன் சொருபன்—பொற்பதஞ் சூடிச் சிற்பத வீடு—கையிற் கனியெனக் காணு மையோ—தர்க்க நெறியிற் சார்வார் தர்க்கஞ்—சொல்லல தில்லை யாருஞ் சொல்லு—மனனல தில்லை யாரு மனனுங்—கனவுஞ் ஞானக் காரிய மாரு—மஞ்ஞா னத்தா லாகிய விருணெறி—மெய்ஞ்ஞா னத்தை விளக்கு மாறென்—னிலதுள தேக மநேக மென்ப—தலநிலை தர்க்க மறைவ திலதெனி—விலது முத்தி யெய்தாத லின்ப—மலடி மைந்த னெய்துத னிலையா—முள்ளது முன்னே யுள்ள தாதலி—னென் னறு முத்தி யென்செய வுள்ள—தன்னின் மாசு தானொழித் திடுத- லென்னி லேறிய மாசோ முன்னே—யுள்ள மாசோ வொழிப்ப தென்னின்—விள்ளா முன்னே யுள்ள தாகி—னிடையோர் காலத் தென்னின் முத்தி—யடைவோர் நிறத்தி னடையும் பின்று— மொழிவரு பரம்பொரு ளொன்றே யாகி—னிழவு பேற தில்லை னிறைய—வேறே யொருவ னுண்டெனின் வேறு—கூடின் முத்தி யிற் கூடா தொரு—மிங்ஙன மான பின்ன—ரெங்ஙனஞ் சொல்லா ரிகற்சம யிகளே." அன்றியும், (165) "பின்னு பின்னம தனைமே நின்று பிணங்கா நிற்பர்கள் பேச்சிற்கு—முன்னு நின்றிடு மனாதுங் கும்பிவை யுடையா னெனவரு முணர்விற்கு—முன்னு நின்றிடு சொருபா னந்தனை மொழிவா னரிதெனு முதுமேதகுஞ்—சொன்னு லறிகில ரவனு ருளடி சூடா தவர்மதி கேடாமே." எ-ம். பிரம கீதை. (166) "வேத மாகம புராண மிருதிகள் மேவுறு மார்க்க—

எ - து. பெத்த தசைக்கண்ணே சீவாதிகளினது உண்மை தெரிதல் ஒருவருக்கும் கூடாமையால், அப்பந்தத்தை நீக்குதற் பொருட்டுச் சிவதரிசனம் வரும்படி மனோலயசாதகம் செய்ய வேண்டும். எ - று.

இதன் கருத்துப் பந்தநீக்கத்திற் சிவதரிசனமும், சிவதரிசனத்தின் மனோலயமும், ஒரு தலையாக வேண்டப்படுமென்பதாயிற்று.

மனோலயஞ் செய்யவேண்டுமென்பதற்குப் பிரமாணம்: திருமந்திரம். (174) "மனமாயை மாயையிம் மாயை மயக்க—மன மாயை தான்மாய மற்றொன்று மில்லை—பினைமாய வேண்டா பிதற்றவும் வேண்டா—தனையாய்ந் திருப்பது தத்துவர் தானே." எ - ம். தேவிகாலோத்தரம். (175) "கருத்தடங்கின் முத்தியது [1]கையகலிற் கட்டாகும்-விரித்தபொரு ளிதுவென்ன வறிவுடைய மேதக்கோர்—திருத்தகுநல் லறிவாலே சித்தத்தைத் திறம்பாம—லருத்தியுட னிலைநிறுத்து மதுவறிவின் பயனுமால்." எ - ம். ஞானவாசிட்டம். (176) "சனன கருமங் களின்வித்தாய்த் தருவை யசைக்குங் காற்றேபோற்—றினமு முடலை யசைப்பதுவுஞ் சித்த மிதனைத் தீர்வதுவே—யனக சகலத் தியாகமதா மதுவே பரம வானந்தம்—வினவு பிறவெல் லாமிகவும் வெருவு கின்ற வெந்துயரே." எ - ம். பிரபுலிங்கலீலை. (177) "விரிந்த நெஞ்சங் கருவியாம் விடய முணா விரியாம—லொருங்கு நெஞ்சங் கருவி யாந் தன்னை யுணர வொருங்காமல்—விரிந்த நெஞ்ச முடையானை விடாது பிறவி யென்றுணர்க—வொருங்கு நெஞ்ச முடையானை யுறாது பிறப்பென் றுணர்கவே." எ - ம். மோகவதைப்பரணி. (178) "வீயு மோகினை வேர றுமல் விடஞ்செய் மோகன் விவேகனுன்—மாயு மோவுயர் மாயை யாரு மனத்தி னுரு மிருக்கவே." எ - ம். ஒழிவிலொடுக்கம். (179) "குடையுஞ் செருப்புங் கொடு நடப்ப தன்றிப்—படியும் விசும்பும் பரப்பி - யிடையாடு—மாத்திரம்போ லேசமய வாதமனம் போதாத—சாத்திரங்கற் றார்வீடுற் றார்." எ - ம். மற்றும் வருவனவற்றுற் காண்க.

மனோலயமுண்டாகவே திருவருடோன்று மென்பதற்குப் பிரமாணம்: திருக்கடைக்காப்பு. (180) "கள்ள நெஞ்ச வஞ்சகக் கருத்தைவிட் டருத்தியோ-டுள்ள மொன்றி யுள்குவா ருளத்துளா

1. அதுகையகலில் - கருத்தடங்காது நீங்கில்.

னுகந்தவூர்—துள்ளி வாளை பாய்வயற் சுரும்புலாவு நெய்தல்வா—யள்ள னுரை யாரல்வாரு மந்தனுரு ரென்பதே.'' எ-ம். தேவாரம். (181) ''வெள்ளத் தார்விஞ்சை யார்கள் விரும்பவே—வெள்ளத் தைச்சடை வைத்த விகிர்தனார்—கள்ளத் தைக்கழி யம்மன மொன்றிநின்—றுள்ளத் தில்லொளி யைக்கண்ட துள்ளமே.'' எ-ம். திருப்பாட்டு. (182) ''குண்டலங் குழைதிகழ் காதனே யென்றுங் கொடுமழு வாட்படைக் குழகனே யென்றும்—வண்டலம் பும்மலர்க் கொன்றைய னென்றும் வாய்வெரு வித்தொழு தேன்விதி யாலே-பண்டைநம் பலமன முங்களைந் தொன்றாய்ப் பசுபதி பதிவினவிப்பல நாளுங்—கண்டலங் கழிக்கரை யோதம்வந் துலவுங் கழுமல வளநகர்க் கண்டுகொண் டேனே.'' எ-ம். பட்டணத்துப் பிள்ளையார். (183) ''இருக்கு மருதினுக் குள்ளிமை யோர்களு நான்மறையு—நெருக்கு நெருக்கத்து நீளகத் திற்சென்று மீளவொட்டாத்—திருக்கு மறுத்தைவர் தீமையுந் தீர்த்துச்செவ் வேமனத்தை-யொருக்கு மொருக்கத்தி னுள்ளே முளைக்கின்ற வொண்சுடரே.'' எ-ம். அருணகிரிநாதர். (184) ''அராப்புனை வேணியன் சேயருள் வேண்டு மவிழ்ந்தவன்பாற்—குராப்புனை தண்டையந் தாடொழல் வேண்டுங் கொடியவைவர்—பராக்கறல் வேண்டு மனமும் பதைப்பறல் வேண்டுமென்றா—விராப்பக லற்ற விடத்தே யிருக்கை யெளிதல்லவே.'' எ-ம் தத்துவராயர். (185) ''இசையானலனெனை யாளுடை யானிந் தியங்களுட —னசையாத நெஞ்சு கொண் டன்பா னினைந்தழு யும்முடம்பி—னசையான தின்றி நலஞ்செய்வ ராயினற் றுடலையின்—மிசையா வைத்தென்று மெய்யான தன்னை வெளிப்படவே.'' எ-ம். தேவிகாலோத்தரம். (186) ''மருவிய பொருண்மே லன்பாய் வானரம் போற்ச ரித்துத்—திரியுமச் சித்தந் தன்னைத் திரித்துச்சூ னியத்தே நின்றான் மருவினோர் பிறித லின்றி வானவ ரறிவுக் கெட்டாப்—பொருவிலா நித்த சுத்தப் பொருளினை யடைவரன்றே.'' எ - ம். பகவத்கீதை. (187) ''வேண்டல்வேண் டாமை யின்றி மிகைசெலாப் புலன்களாலே— மாண்டபோ கங்க டுய்ப்பான் மனங்கலங் குறான்மற் றத்தா—வீண்டிய தெளிவுண் டாமாற் றெளியவே யெல்லை யின்றிப்—பூண்டநோய் நீங்கு நீங்கப் புலனிலை நிற்கு மன்றே.'' எ - ம். பிரமகீதை. (188) '' பரப்பி னுனிந் தியங்களைப் பராக்குறப் பரம்பரனுள்ளாகி — யிருத்த லாலறி வொண்கில்ன் புறம்புள விதரமே காண்கின்றான்—றிருப்பி ஞானநாட் டத்தினு லப்பொரு டெரியவே பெறுந்தீர—னொருத்த னேயவி நாசியாம் பரவொளி யாயவனொளிர்கின்றான்.'' எ - ம். பிரபுலிங்கலீலை. (189) ''பொறியிற் புறத்து மனஞ்செல்லிற் புவனே தோன்றி யிடுமகத்திற்—செறியிற்

கரணம் பரானந்த சிவமே தோன்றுஞ் சிவந்தோன்ற—வறிவிற் பரந்த விடயமய மாகு முலகந் தோன்றுமற்—பிறவித் துயரக் கடல்கடந்து பேரின் பஞ்சார் குவரென்று.'' எ-ம். திருக்களிற் றுப்படியார். (190) "அன்றிவரு மைம்புலனு நீயு மசையாதே—நின்றபடி யேநிற்க முன்னிற்குஞ் - சென்று—கருதுவதன் முன்னங் கருத்தழியப் பாயு—மொருமகடன் கேள்வ னுனக்கு.'' எ-ம். சிவானந்தமாலை. (191) "ஐயாம லைம்புலன்சேர் வாயி லொடியெ றிந்தவ்—காயா மனத்தை யலைவறுத்து - மாயாதே—பண்டை யறிவொழிந்து பண்டையறி வாய்ப்பாத்தை—மொண்டழுந்திப் போவது முத்தி.'' எ-ம். மற்றும் வருவனவற்றுற் காண்க.

மஹேஞலயத்திற்றோன்றிய திருவருளாற் பந்த நீங்குமென்பதற்குப் பிரமாணம்: திருவள்ளுவர். (192) "பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா—ரிறைவ னடிசேரா தார்.'' எ-ம். தேவாரம். (193) "பொன்னுள் ளத்திரள் புன்சடை யின்புற—மின்னுள் ளத்திரள் வெண்பிறை யாயிறை—நின்னுள் ளத்தருள் கொண்டிரு ணீங்குத—லென்னுள் ளத்துள தெந்தை பிரானிரே.'' எ-ம். திருவாசகம். (194) "என்புள் ளுருக்கி யிருவினையை யீடழித்துத் துன்பங் களைந்து துவந்துவங்க டூய்மைசெய்து—முன்புள் ளவற்றை முழுதழிய வுள்புகுந்த—வன்பின் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே.'' எ-ம். பட்டணத்துப்பிள்ளையார். (195) "உற் பவந் துடைத்த னிற்பிடித் தல்லது-பிறிதொரு நெறியி னில்லை.'' எ-ம். தத்துவராயர். (196) "இதையா லயத்தி விருப்பா ரறிய விரந்துருகிப்—பதையா திருப்பதென் பாவிநெஞ் சேபர ஞாருளாற்—சிதையா தொழியிற் சிலுகாய் விளையுமிச் சில்சமயக்—கதையான் மனக்கணக் கால்விடு மோவிக் கடும்பிறப்பே.'' எ-ம். பரமகீதை. (197) "இந்த வாக்கையி லியம்பிய பரம்பொரு ளறியி—லந்த மானுடன் மெய்யதா யபேதமா யிகிர்த்—தொந்த மாம்பர மடைந்திடுந் தோன்றிடா தாகிற்—பந்த மாம்பவக் கடற்படும் பாகதி யடையான்.'' எ-ம். சிவானந்தமாலை. (198) "வெய்யோன் வரவரவே மெய்ந்நிழலுந் தம்முளே—யைய வொடுங்கும் பகுதிபோ - லைய—னருள்வந் தணுகவே யாணவமாம் போத—மருளுங் கெடும்போய் மறிந்து.'' எ-ம். மற்றும் வருவனவற் (சக)
றுற் காண்க.

மஹேஞலயத்தாற் பரத்தை யுணர்ந்தோன் மற்றையவனைத்தை யுமுணர்ந்தோனென்று மேற் கூறுகின்றார்.

மனோலயசாதனஞ் செய்யு நீர்மை மேற்கூறுகின்றார்.

அந்நிட்டை யீது மடைகுதற் கூனுயிர்ப்
பின்னத்தை முன்னுணர்ந் துந்தீபற
பேதைமை நீங்கிடென் றுந்தீபற. (51)

எ - று. பந்தநீக்கத்துக்கு ஏதுவான அந்த மனோலய நிஷ்டை கூடுதற்குப் பந்தத்தை முன்பறிந்து நீங்கவேண்டலின் தேகேந்திரியாந்தக் கரணங்களை நேதி நேதி யென்று ஒன்றொன்றாகக் களைந்து தன்னுண்மை காணுவதாகிய ஊனுயிர் வேறுபாடு முன்புணர்ந்து உனதறியாமையை நீங்குவாய், எ - று. (௫௧)

என்னுண்மையாலது இத்தேகத்தின் வேறில்லை இத்தேகமே நானென்று கூறுகிற்கும் மாணாக்கனை நோக்கித் தேகம் நீயல்லை யென்று மேற்கூறுகின்றார்.

ஓயு மரணந்த காலத் துருத்துவெந்
தீயட லானுமின் றுந்தீபற
தேகமீ நானல்லை யுந்தீபற. (52)

எ - று. இளைத்தேன் பருத்தேனென்று தேகத்தைச் சொல்லுதலினாலும், இதனுட் சோதிக்குமிடத்தும் இதற்குவேறாக ஓராத்மாவைக் காணாதபடியினாலும், தேகமேயானென்னில், அது கூடாது. என்மாடு என்வீடு என்கிறபோது சொன்னவனுக்கு அவை வேறாயிருத்தல்போல் என்னுடம்பென்றலாலும், யோகிகள் கூடுவிட்டுக் கூடுபாய்தலினாலும் மரணகாலத்தில் அக்கினி மிகவும் பற்றிக் கடத்தைப்போல் சுடுதலினாலும், தேகம் நீயல்லை வேறே, எ - று.

அடலானுமென்றவும்மையால் மற்றைய மறுதலையும் வருவிக்கப்பட்டதெனக்கொள்க. (௫௨)

பிராணவாயுவும் ஆத்மாவல்லவென்று மேற்கூறுகின்றார்.

உணர்வின்றி நாளு முறக்கத் தடைந்த
மணநுக ராதானு முந்தீபற
வாயுநீ யல்லை யுந்தீபற. (53)

எ - து. தேகத்திலே பிராணவாயு இருக்கிறபோது இது குளிர்கிறது இது சுடுகிறது என்றறிந்தும் அது நீங்கினபோது கடம்போலத் தேகம் சுடப்படுதலினாலே பிராணவாயுவே யானென்னில், உணர்வின்றித் தூங்குந்தோறும் நித்திரையில் அஃது இராநின்றும் அப்போது அடைந்த சத்தாதியையுணராமையினாலும் பிராணவாயுவும் நீயல்லை. எ - று. (௫௩)

இந்திரியங்கள் ஆத்மாவல்லவென்று மேற் கூறுகின்றார்.

ஒன்றுணர் போழ்தொன் றுணராமை யானும்வே
றொன்றுணர்ந் தோதலா னுந்தீபற
உணர்விந் தியங்களன் றுந்தீபற. (54)

எ - து. சத்தாதிகளைக் கிரகித்து உணராநிற்கின்றன அவை அடங்கின நித்திரையிலே தேகமும் பிராணவாயுவும் இருக்கப் பாம்புவரினும் சத்துரு வரினும் அறியாமற்கிடத்தலால் ஞானேந்திரியங்களே யானென்னில், இந்திரியங்களுள் ஒன்று உணர் போழ்து ஒன்று உணராமையாலும், ஒன்றை ஒன்று உணராமையாலும், ஒன்று அறிந்ததை ஒன்று அறியாமையாலும், அவைகளுக்கு வேறாய் ஒன்று இருந்து நான் கண்டேன் கேட்டேனென்று கூறுதலாலும், கண்ணிற்குத் தீபம்போல் உனக்கு விஷயகாரணமல்லது அவைகள் நீயல்லை. எ - று.

ஒன்றுணர்போழ்தொன் றுணராமையாறு மென்றமையால் துவக்கிந்திரியமே ஆத்மாவென்பாரையும் மறுத்தாராயினார். அஃது எங்ஙனமென்னில், துவக்கிந்திரியம் சரீரமெல்லாம் வியாபித்திருத்தலின் இஃதே மற்றைய நான்கு கொள்கையினின்று சத்தாதியை உணராநிற்கின்றதெனில், அது கூடாது. அங்ஙனமாயின், ஐம்புலனும் ஒருங்கேயுணர்தல் வேண்டும்: அஃது இன்மையால், துவக்கிந்திரியமும் ஆத்மாவன்றென்று மறுக்கப்பட்டதெனக் கொள்க. (௫௪)

வாக்கிந்திரியமும் ஆத்மாவல்லவென்று மேற்கூறுகின்றார்.

ஏனைஞ் ஞமற்கு மியாவென்ன தென்றபி
மான மிருத்தலா னுந்தீபற
வாக்குநீ தானல்லை யுந்தீபற. (55)

எ - து. இந்திரியங்களுணர்ந்ததை நான் கண்டேன் கேட்
னென்று வாக்கிந்திரியம் கூறாநிற்கின்றது; தானறிந்ததைக்
மல்லது அறியாததைக் கூறாமையால் வாக்கிந்திரியமே
னென்னில், அது கூடாது. வாக்கில்லாத ஊமனிடத்தும்
னனதென்கிற அபிமானம் இருத்தலால், அது வசனகரண
து நீயல்லை எ - று. (௫௫)

ஆங்காரமும் புத்தியும் மனமும் ஆத்மாவல்லவென்று மேற்
கின்றார்.

ஆங்கார நிச்சயித் தப்புத்தி பற்றலா
னோர்ந்துள னன்மன முந்நீபற
ஒன்றுநீ யன்றிவற் றுந்நீபற. (56)

எ - து. ஊமனுக்கும் யானெனதென்கிற அபிமானம் இருத்
ல் இங்ஙனம் செய்வது அகங்காரமாதலின் அதுவே யானென்
; அது கூடாது. ஒரு பொருளின்கண் நிச்சயமில்லாவிடத்து
று என்னதென்றும், யானுடையேனென்றும், அபிமானித்தல்
ாமையால் அஃது உனக்குக் கிரியாகரணமல்லது நீயல்லை.
ன் நிச்சயிப்பது புத்தியாதலால், அஃதே யானென்னில், ஒரு
ருளின்கண்ணே பற்றுதலில்லாவிடத்து அப்பொருளை நிச்ச
தல் கூடாமையால், அஃது உனக்கு ஞானகரணமல்லது நீ
ல. ஆயின் அங்ஙனம் செய்வது மனமாதலின், அஃதேயா
ன்னில், நெஞ்சு நினைவெழாவிடத்து அஃது ஒன்றையும்
றுதலின்மையால் அஃது உனது இச்சாகரணமல்லது நீயல்லை.
று. (௫௬)

சித்தமும் ஆத்மாவல்லவென்று மேற்கூறுகின்றார்.

அறிவா னினைவு மடங்கலாற் சித்த
மறிவென் றசித்தாமென் றுந்நீபற
அறிவுன் னுருவமென் றுந்நீபற. (57)

எ - து. அங்ஙனம் நினைப்பது சித்தமாதலால் அதுவேயா
ன்னில்; அது கூடாது. நெஞ்சின்கண் நினைவும் எழாமல்
க்குவோர் உளராகலின் வேறே ஓரறிவு இருந்துகொண்டு
தத்தையும் அசைவின்றித் தடுத்தலால் அச்சித்தமும் நீயல்லை,

இவையெல்லாம் யானலனுகில் எனது உண்மை மற்றியாதென்னில், தத்துவாதீதமாகிய ஞானமே நினது வடிவம். எ - று. (௫எ)

மேல் அவ்வாத்மாவினது பரிபூரணங் கூறுகின்றார்.

எங்குமாய் முத்தியி லீசனோ டொப்பதனான்
மங்கா வுயிர்வடி வுந்தீபற
மற்றைய கூறொணா துந்தீபற. (58)

எ - று. அழிவின்றி விளங்காநிற்கும் ஆத்மா பரமுத்தியில் பூரணமாகிய பரத்தோடு கூடிப் பூரணமாகையால் அதனுக்கும் மகத்பரிமாணமல்லது மற்றைய பரிமாணங்கள் கூறுதல் கூடாது. எ - று.

அஃது எங்ஙனமெனில், உள்ளதன்றி இல்லது ஒருகாலும் உண்டாகாமையின் முத்தியில் விபுத்துவமுடைய ஆத்மா பந்தத்திலே அஞ்ஞானத்தினும் ஆர்ப்புண்டதாதலின், சரீரங்களில் அணுபரிமாணமாயும், மத்தியபரிமாணமாயும், விளங்காநிற்கும் உண்மை மகத்பரிமாணமே யென்பது துணிவென்றலெதனைக் கொள்க. (௫அ)

மேல் தன்னுண்மை அறிதற்கு முற்பழகிப்போந்த வாசனைகளை நீக்கவேண்டுமென்று மேற் கூறுகின்றார்.

இந்தடை வாளின் னியல்பை மறைத்தவப்
பந்தங்கள் போக்கநீ துந்தீபற
பழவா தனையொடா முந்தீபற. (59)

எ - று. ஞானவடிவமாயிருக்கின்ற நினது உண்மையைச் சற்றும் தெரியவொட்டாமல் அநாதியே மறைத்துநிற்கும் அஞ்ஞானாதி பாசங்களை வேறாக்குதற்கு நின்னோடு பழகிப்போந்த சகல வாசனையும் பற்றற விடுவாய். எ - று.

இ-ம். தேவிகாலோத்தரம், (204) "மந்திரஞ் செபஞ்சு தியானம் பூசனை யணக்கம் வேண்டா—வந்தமி லாத முத்திக் குபாயமே யறிதல் வேண்டுஞ்—சிந்தனை புறமே செல்லிற் றுயரமே நீரிய வீட்டிற்—பந்தமாந் துன்ப நீங்கிப் பரமான வின்பஞ் சேர்வார்."

எ-ம். பிரமகீதை. (205) "சதுர்மறை யொழிந்த வாதனை பொல்லாத் தர்க்கவா தனையுல கத்தின்—மதமுறு சமய வாதனை தார மக்கள்சுற் றத்தின்வா தனையு—மிதமுறு பொருளில் வாதனை தேகேந் திரியமனம் புத்திநற் பிராணன்—முதலவா தனையும் வித்தை வா தனையு முடிவில்போ கத்தின்வா தனையும்." அன்றியும். (206) "வறுமைச் சிவனைத் திருநெடுமாலை யிகழும்வா தனையும்வே தத்திற்-கூறிடு ஞான சாதன மாகக் கொள்ளுமுத் தாளபுண் டரத்தை—மாறுபா டிகழும் வாதனை பாவ வாதனை யாவுமா ளுடர்க்கு—வேறெனும் பரமாத் துவிதஞா னத்தை விலக்கிடும் விரோதிவின் னையே." அன்றியும், (207) "ஆதலால் வீடதனி லாசை யுள்ளோ னதின்மிகவுந் தாற்பரிய முடை முன்னை—மோதுவா தனைகளெலா மிகந்தெப் போது முற்றபர மாத்துவித ஞானி யாவன்—வேதவே தாந்தங்க ளுரைக்கப் பட்ட மேலான வத்துவித ஞான மாகு—நாதனும் பிரமத்தை நவில லாமோ நாமௌனத் திருப்பதலா லுகத் தீரே." எ-ம். ஞானவாசிட்டம். (208) "மறுகுவா தனைக ளற்ற மௌனத்தை யொழிய வேறே—குறுகதி நல்ல தில்லை புணர்வன வுணர்ந்த தாரும்—அறுதிசை பத்துஞ் சுற்றி மீண்ட தாந் தொல்லை ஞாலத்—தறுதியா யுண்மை கண்டோர் சிலர் நின்றே ரவத்தின் மாய்வோர்." எ-ம். சிதம்பரபுராணம். (209) "அன்றியுமாங் கருமமனந்த கோடிபிறப் பிடைக்கரும மாற்றினு னுர்—துன்றரிது பரகதியைச் [1]சைமினிய வேதாந்தச் சொற்க ணோர்ந்து—நன்றிதரு பொருட்டெளிவாஞ் சிவஞானஞ் சிவனருளா னண்ணின் முத்தி—யொன்றலெனி காதலினுன் மூதுணர்வா விதற்கேற்ற வுறுதி யோர்வாய்." எ-ம். சிவஞானதீபம். (210) "சாத்திரம்புந் தவம்பூசை சமயமுதற் தருக்கந் தந்திரமந் திரயோகந் தவவிரதஞ் சீல—மேத்தரிய பாவனையெண் சித்திகளே முதலா மெய்பயனா முத்தியெனக் கொளுமொருசொல் லதனுற்—றீர்த்தவன் மெய்த் தேசிகனு மவனருளா லகலாச் சித்தமல மறுத்தாலிற் றீமைநன்மை செயினும்—வாய்த்தகதி யவன்செயல்போ லிசைந் திசையா தொழுகும் வண்மையரே மெய்ஞ்ஞான வுண்மையிலை யினரே." எ-ம். சிவானந்தமாலை. (211) "பூசனையும் வாசனையும் புத்தகமுஞ் சாத்திரமும்—வாசகமா மந்திரமுந் தந்திரமு - மோச—மிறக்கின்ற சிந்தனையு மெல்லாம் பொருளை—மறப்பென்று மாறு மதி." எ-ம். ஒழிவிலொடுக்கம். (212) "கிரியைக் கிளைத்தாலிந்து கேட்டவர்க்குச் சும்மா—திரியச் சுகம்விளைத்த சீமான் - குருவன்றிச்—சற்றே பதைப்பைத் தவிருஞ் சுகம்படைக்கக்—கற்றுணர்

1. சைமினிய—சைமினிமுனிவர்.

காலனுமாங் காண்.'' அன்றியும், (213) "சுகாதீதம் வேண்டிற் றெழில்செய்வோ மென்று—ணகாரோ நுயில்வார் நடந்தோ—விகாரமெனச்—சாத்திரமும் பூசைச் சமாதிகளுஞ் சார்போதக்—கோத்திரங்காண் மாயைக் குழாம்.'' எ-ம். வள்ளல்வாக்கு. (214) வார்த்தையா லர்ச்சனையான் மந்திரத்தாற் பாவகத்தாற்—சாத்திரத்தாற் றந்திரத்தாற் றர்க்கத்தா - லாத்தையுட—லுற்பவமு மோயாதிங் குன்றுனை மாணவக—தற்பரமுங் கிட்டாது தான்.'' எ-ம். மற்றும் வருவனவற்றாற் காண்க. (௫௯)

வாதனைகளெல்லாம் நீங்கிய மாணாக்கனுக்குச் சமாதி கூடுதற்கு ஆசனம் மேற்கூறுகின்றார்.

ஒட்டற முத்தித் தடையா யுளவெலாம்
விட்டனை யேலினி யுந்தீபற
மேவொண் சுகாசனத் துந்தீபற. (60)

எ-து. முத்திவிலக்கென்று இங்ஙனம் கூறப்படுஞ் சகல வாசனையும் மாசற ஒருங்கே நீத்தனையாயின், மேற்சமாதி கூடுகைக்கு அநுகூலமாகியது யாதொரு சுகாசனம்; அவ்வாசனத்தைப் பொருந்துக. எ-று.

இ-ம். பகவற்கீதை. (215) "தலையுங் கழுத்து முடம்புமிவை செவ்வே தளரா தேயிருக்கு—நிலையி லிருந்து கண்களைத்தன் மூக்கி னுனிமே வேறுத்தி—யலையுங் கடல்போற் காமமுவ்வைப் பயமுந் தன்னை விட்டகல—வலையு மனமுள் ளடங்கவெனை யுணர்ந்தேயிருக்கு மதுயோகம்.'' எ-ம். பிரமகீதை. (216) "தக்கருநா னத்தைத் தான்பெறற் பொருட்டுத் தனியிடந் தனையடைந் திதய—துக்கமே வாமற் சுகாசனத் திருந்து தேகாலை கழுத்துடம்பிவைநே—ராக்குமா திருத்திப் புதிலெகாண் டிந்த வுடம்பையுந் தாளனம் பண்ணி—யிக்கவாய் வருயிர் தியங்களை யெல்லாம் விடயமே லெழாவகை விலக்கி.'' எ-ம். அமுதசாரம். (217) "செவ்வே யுடலுங் கழுத்துஞ் சிரமுமுற—வெவ்வா தனத்தே யிருந்தவர்க்குங் - கைவந்தால்—வாத முதலேனைய் நவியா மதியுடையோர்—ராதன மென்ப தது.'' எ-ம். மற்றும் வருவனவற்றாற்காண்க. (௬௰)

மேல் இச்செய்யுள்தொடங்கி உண்மை நிஷ்டை கூறுகின்றார்

வாங்கிப் பொறியைந்து ணின்ற மனந்தன்னை
நீங்கா தகத்திருந் துந்தீபற
நினைவு மெழாமலென் றுந்தீபற. (61)

எ - து. ஐம்பொறிகளோடு கூடிச் சத்தாதி விஷயங்களைக் கவராநிற்கும் மனத்தினை அவற்றினை விட உள்ளே வாங்கிப் பின்பு அவற்றின் வழி போகாமல் நெஞ்சிலே வைத்து அவ்விஷய வாசனைகளும் எழாதபடி அடக்கவேண்டும். எ - று.

இ-ம். தேவாரம். (218) "பொறிப்பு லன்களைப் போக்கறுத் துள்ளத்தை—நெறிப் படுத்து நினைந்தவர் சிந்தையு—ளறிப்பு றும்மமு தாயவ னேகம்பங்—குறிப்பி னாற்சென்று கூடித் தொழுதுமே." எ - ம். திருவாய்மொழி. (219) "புலனைந்து மேயும் பொறியைந்து நீங்கி நலமந்த மில்லதோர் நாடு புகுவீர்—லமந்து வீய வசுரரைச் செற்றான்—பலமுந்து சீரிற் படிமினோ வாதே." எ-ம். பகவத்கீதை. (220) "வாங்கி யைம்பொறி நின்ற மனத்தினை——நீங்கி டாவகை நின்னு ளிருத்தியே - நீங்கி யாவையுஞ் சிந்தை செயாமையாம்—பாங்கி யாதது வேபயில் வாயரோ." எ-ம். ஞான வாசிட்டம். (221) "மனமணி பேதச் சேற்றின் மறைந்தொரு வருக்குந் தோன்றா—கனமுறு விவேக நீராற் கழுவினாற் சித்தி காட்டும்—வினவுறு விவேக வன்பான் மெய்ம்மையை மதியாற்கண்டு——சினமுறு பொறியை வென்று தீர்வரும் பிறவி தீர்வாய்." எ-ம். பிரபுலிங்கலீலை. (222) "இந்திய மோரொன் றாவிட் டிடின்மற்றை யொன்று சாரு—முந்திய மனம ழிப்ப முற்றும்போ மணிய பாம்பி——னைந்தலை களினு ளொன்றை யரிந்திடின் மற்றொன் றாலஞ்—சிந்திடு மிடற ரிந்தாற் றீர்ந்திடு மொருங்கு மாதோ." எ - ம். சிவானந்தமாலை. (223) "பூதஞ் சுழலும் பொறிபுலனந் தக்கரணம்—போதங் கழித்துநாள் போக்காதே - போதச்—சிறையா நிறைவகலச் சின்மயனே யத்தே—நிறையா நிறைவாகி நில்" எ - ம். மற்றும் வருவனவற்றாற் காண்க. (சுக)

பதைத்தெழா துள்ளம் புதைப்பாய் பதைக்கில்
வதைப்பாயங் கங்கேயென் றுந்தீபற
மாயு மனப்பேயென் றுந்தீபற. (62)

எ - து. சித்தத்தைச் சற்றும் அசையாதவண்ணம் அடக்கக்கடவாய். அங்ஙனம் அடங்காது அசைந்து ஒருபொருளைப்

பற்றுமாயின், பற்றுமுதிர்ந்து நிச்சயிப்பதற்கு முன் விவேகத் உடனே அழித்து முன்னின்ற நிலையே நிற்கக்கடவாய். அட் முது அலகைபோல் உழலாநிற்கிற மனம் இறந்திடும். எ - று

இ-ம். தேவிகாலோத்தரம். (224) "பற்றினுற் சலிக்கு ளம் பற்றுமற் பண்ணிக் கொள்க—நிற்றலின் றெனினுந் நிலையினி னிறுத்திக் கொண்டாற்—பெற்றன மென்று பே பின்னைப்பே ராமற் காக்கு—நற்றவ ரன்றி யிந்த வுலகினி ன யாரோ." எ - ம். ஞானவாசிட்டம். (225) "எந்த வெந்த வா களிதயத் தெழுந்த வவையெல்லா—மந்த வந்த விடத்த னதுவே மாயைக் கழிவாகு—முந்து போக பேதமென மொ விருவா தனைவிட்டு—வந்த பாவா பாவங்கண் மாற்றி விகற்ட மகிழ்வாய்." அன்றியும், (226) "எங்கே யெங்கே மனடு யினையோ ரென்ன வீழ்ந்தழுந்து—மங்கே யங்கே நின்றெ யகண்ட வறிவி லடைவிப்பாய்—சங்கே தமதா யிவ்வாறு ச துளமா மதகரியை—யெங்கே தமறத் தனைத்தெல்லா விசா லும் வீடனைவாம்." எ - ம். மற்றும் வருவனவற்றுற் க

அசைவறச் சித்த மடங்குமேற் பின்ன
ரசையாமற் காத்திடென் றுந்தீபற
அறிவால் வருந்திபு முந்தீபற.

எ - து. அசையொழியாத சித்தம் யாதொரு கா அசையொழிந்து அடங்குமாயின் பின்னர் அசையாதபடி கண் அசைவு பிறப்பித்தற்கு உரியன எவையேனும் அ அறிவினது வீரப்பாட்டால் அக்கணமே நீக்கித் திடசித்தப் ணிக்கொள். எ - று.

இ-ம். திருவள்ளுவர். (227) "எண்ணிய வெண் கெய்துப வெண்ணியார்—திண்ணிய ராகப் பெறின்." அன் (228) "துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி—யின்ப ரும் வினை." தேவிகாலோத்தரம். (229) "ஆரா சித் தோர் காலத்தி லடங்கு மானுற்—போராமல் வருந்திக் க பின்னைச்சிந் தனைகள் சென்று—சாராமல் வல்ல வாறு த சார் வான வெல்லாஞ்—சோராமன் மயக்க நீக்கித் திடமாகச் கொள்வான்." எ-ம். ஞானவாசிட்டம். (230) "வருந்தி மனந்தன்னை மாற்றி யில்லை யுண்டென்று—திருந்த பதத்தி

திடுவா யிடர்தீர் செல்வ மிடரின்றிப்-பொருந்த வேண்டு மனம்வெ ன்றூற் புவன மூன்றுந் துரும்பாகுந்-திருந்த வினிதென் றனவெல் லாந் தீதாய்த் தோன்றின் மனமாளும்.'' எ-ம். நாலடியார். (231) "ஊக்கித்தாங் கொண்ட விரதங்க ளுள்ளுடையத்—தாக் கருந் துன்பங்க டாந்தலை வந்தக்கா—னீக்கி நிறூஉ முரவோரே நல்லொழுக்கங்—காக்குந் திருவத் தவர்.'' எ-ம். அருட்பிரகாசம். (232) "கடைதரு தீப்புகை கால்வருத் தங்கொடு கைநெகிழ்ந்து— விடினவிந் தாக்க வொணுத்துய ரெய்தலின் வெம்பொறிவாய்ப்— படர்தரு சித்த மொருகா லடங்கிற் பினைப்படாத்—தடைசெயல் வேண்டும் படர்ந்தா லெவர்பின் றடுப்பவரே.'' எ-ம். மற்றும் வரு வனவற்றூற் காண்க. (௬௩)

ஆங்கறி யாமையுஞ் சாரா தறிவொடுந்
தூங்குவாய் நாளுமென் றுந்தீபற
தோன்றும் பரம்பொரு ளுந்தீபற. (64)

எ - து. விகற்பவுணர்வாகிய சித்தசலனமற்றிருந்துள்ள அவ் விடத்து அறியாமையாகிய கேவலமும் பொருந்தாமல் உன்னு டைய சுபாவ அறிவோடுங்கூடி இரவும்பகலும் இடைவிடாது சாதகம் செய்வாயாகில் அங்ஙனம் உனக்கு மேலாகிய பரம்பொ ருளே தோன்றும். எ - று.

இ-ம். திருமந்திரம். (233) "அறிவறி யாமை யிரண்டு மகற் றிச்—செறிவறி வாயெங்கு நின்ற சிவனைப்-பிறிவறி யாது பிரா னென்று பேணுங்—குறியறி யாதவர் கொள்ளறி யாரே.'' அன்றி யும், (234) "பொங்கு மிருணீக்கும் புண்ணியக் கூத்தனை —யெங்குமாய் நின்றூடு மேகம்பக் கூத்தனைக்—கங்குல் பகலி னுங் காணுத கூத்தனை—யிங்கெ னிடமாக யான்கண்ட வாறே.'' எ-ம். பட்டணத்துப்பிள்ளையார்பாடல். (235) "நினைந் தனை யற்றுப் பிரியமுந் தானற்றுச் செய்கையற்று—நினைந்தது மற்று நினையா ததுமற்று நிர்ச்சிந்தனாய்த்—தனந்தனி யேயிருந் தானந்த நித்திரை தங்குகின்ற—வனந்தலி லென்றிருப் பேனத்த னேகயி லாயத்தனே.'' எ-ம். தேவிகாலோத்தரம். (236) "நித்தி ரையும் பராக்கினையு நீக்கிச் சித்த மொருநிலையு நீங்காம னிறுத்திக் கொண்டாற்—சித்தமொரு பொருளினையுஞ் சேரா தாகிச் சேரும்

231. ஊக்கி—முயன்று. உரவோர் — மனவலியுடையோர். திரு வத்தவர்—மேன்மையுடையர், அத்துச்சாரியை பெற்றது.

